

# யுகதர்மம்

வீட்டு வாசலில் பாலு நின்று கொண்டிருந்தான்.

மண்ணெண்ணெய் வாங்கிக்கொண்டு சத்யமூர்த்தி அந்த வழிச் சென்றான்.

"ஸ்கூல் நோட்டிஸ் போர்டிலே எழுதிப் போட்டாச்சா?" என்று பாலு அவனைக் கேட்டான்.

"இல்லை" என்று சத்யமூர்த்தி பதில் சொன்னான்.

''டி.எஸ். ஹைஸ்கூல்லே நேத்திக் காத்தாலேயே கொடுத்தாச்சு."

சத்யமூர்த்தி போய்க் கொண்டே இருந்தான்.

"இன்னிக்குக் கொடுக்கறதா நோட்டீஸ் போர்டிலே போட்டா எனக்கு வந்து சொல்லறியா?" என்று பாலு கேட்டான்.

சத்யமூர்த்தியின் கவனம் எண்ணெய் டின் மீது மட்டுமே இருந்தது.

பாலுவுக்கும் தான் கேட்டது சத்யமூர்த்தியால் எளிதில் பூர்த்தி செய்யக் கூடியதல்ல என்று தெரியும். சத்யமூர்த்தி வீட்டுக் குப் பக்கத்தில் பள்ளிக்கூடம் இருப்பதால் அதற்காக அவன் நண்பர்களுக்கெல்லாம் ஸ்கூல் நோட்டீஸ் போர்டில் எழுதிப் போடுவதை வீடு தேடித் தெரிவித்து விட்டு வர முடியுமா?

எஸ்.எஸ்.எல்.சி. முடிவுகள் வெளிவந்து ஒரு வாரமாகி விட்டது. இந்த முடிவுகளை ஆங்கிலப் பத்திரிகைகள் ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை. முதல் பத்து அல்லது பதினைந்து மாணவர்களின் பெயர்களை அறிவித்து விடுவதோடு ஆசுவாசப் படுத்திக்கொண்டு விடுகின்றன. தமிழ்ப் பத்திரிகைகள் விசேஷப் பதிப்புகளைக் கொண்டு வருகிறார்கள். பரீட்சை முடிவுகளோடு

டஜன் கணக்கில் டியூடோரியல் கல்லூரிகளின் விளம்பரங்களையும் வெளியிடுகிறார்கள். இப்போதெல்லாம் எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சையில் வெற்றி பெற்றால் கூடக் கல்லூரிக்குப் போக இன்னும் இரு வருடங்கள் தேவை. தோல்வி அடைந்தவனுக்கும் கல்லூரி அந்தஸ்து தருவது இந்த டியூடோரியல் கல்லூரிகள் தான்.

"பாலு டியூடோரியல் கல்லூரிகளை நாடவேண்டியதில்லை. அவனுடைய பரீட்சை எண் வெற்றி பெற்ற மாணவர்களின் பட்டியலில் இடம் பெற்றுவிட்டது. போகப் போக அவன் நிஜமான கல்லூரியில் இடம் பெறக்கூடும். ஆனால் அது அவ்வளவு எளிதில்லை என்பதும் அவனுக்குத் தெரியும். அவனுடைய பள்ளியிலிருந்து இருநூறு மீட்டர் தள்ளியிருந்த டி.எஸ். பள்ளியில் நேற்று மாலையே மதிப்பெண் லிஸ்டுகளை எல்லா மாணவர்களுக்கும் விநியோகம் செய்துவிட்டார்கள். பாலு படிக்கும் பள்ளியில் இன்றாவது தருவார்களா என்பதுகூடச் சந்தேகமாக இருக்கிறது.

பாலுவுடைய இரு அண்ணன்களும் அதே பள்ளியில்தான் படித்தார்கள். பெரியவனுக்கு எஸ்.எஸ்.எல்.சி. ரிஸல்ட் வந்த இரண்டாம் நாளே மதிப்பெண் பட்டியல், எஸ்.எஸ்.எல்.சி. புத்தகம், டிரான்ஸ்பர் சர்டிபிகேட் முதலியவற்றைக் கொடுத்து விட்டார்கள். இரண்டாவது அண்ணனுக்கு இதற்கெல்லாம் நான்கு நாளாயிற்று. இப்போது பாலுவுக்கு ஒரு வாரம் ஆகியும் ஒன்றும் தரப்படவில்லை. பெரியவன் உடனே கல்லூரியில் சேரப் பெரிய முயற்சி தேவைப்படவில்லை. இரண்டாவது அண்ணனுக்கு நான்கு கல்லூரிகளில் அப்ளிகேஷன் போட்டு இரண்டு கல்லூரிகளிலிருந்து பதில் வரவில்லை. ஒன்றில் "வருந்துகிறோம்' கார்டு வந்தது. நான்காவது, ஊருக்கு வெளியில் புதிதாகத் தொடங்கப்பட்ட கல்லூரி. அவர்கள் மட்டும் பையன் கேட்ட பிரிவு அல்லாமல் வேறொரு பிரிவில் இடம் தருவதாகச் சொன்னார்கள். வேறு வழியின்றி அதையே ஒத்துக்கொண்டு அவன் படித்து வருகிறான். பாலுவுக்குக் கல்வி முறை மாறியிருக்கிறது. அவன் இப்போது இன்னொரு பள்ளியைத் தேடிச் செல்ல வேண்டும். இன்னும் இரு ஆண்டுகள் படிப்புக்கு. அதன் பிறகே கல்லூரி.

ஒவ்வொரு கட்டத்திலும் விண்ணப்பம் பதிவு செய்ய வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு முறை அந்த அப்ளிகேஷன் அனுப்பும் போதும் கூடவே நான்கைந்து சர்டிபிகேட்டுகளையும் இணைக்க வேண்டியிருக்கிறது. மதிப்பெண்கள் நகலின் பிரதி,

பள்ளி டிரான்ஸ்பர் சர்டிபிகேட்டின் பிரதி, பள்ளி நன்னடத்தை சர்டிபிகேட்டின் பிரதி... இதில் ஒன்று தமிழில் இருக்கும். இன்னொன்று ஆங்கிலத்தில் இருக்கும். ஆனால் டைப் அடித்துப் பிரதிகள் எடுக்க ஆங்கிலத்தில் இருந்தால்தான் சௌகரியம். அப்போது தமிழில் உள்ள சர்டிபிகேட்டை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க வேண்டும். டைப் அடித்த பிரதிகளை எடுத்துக் கொண்டு ஒரு அரசாங்க அதிகாரியைத் தேடிப் பிடிக்க வேண்டியிருக்கிறது. அவர் ஒவ்வொரு பிரதியிலும் தன் கையெழுத்தும் ஆபீஸ் ரப்பர் ஸ்டாம்பும் இட வேண்டும். அது 'நிஜமான பிரதி' என்பதற்கு அதுதான் அத்தாட்சி.

பாலுவுக்கு அவன் அண்ணன்கள் இந்த 'நிஜமான பிரதி' களுக்கு அலைந்தது ஞாபகம் இருந்தது. உண்மையில் வீடே அந்தக் காரணத்துக்காக வேதனையில் ஆழ்ந்திருந்தது. அப்பா ஊர் ஊராகப் போகும் மருந்துக் கம்பெனிப் பிரதிநிதி. அவருக்குக் கடைக்காரர்களும் டாக்டர்களும்தான் தெரியும். கெஜட்டட் அதிகாரி என்று ஒருவரைத்தான் தெரிந்து வைத்திருந்தார். அவரிடம் எவ்வளவு தடவை செல்வது? ஒருமுறை அவர் கிடைக்கவில்லை. அப்பாவும் ஊரில் இல்லை. அண்ணன் தவித்துப் போய்விட்டான். வேறு யாரிடமோ சொல்லி, அவன் பத்து ரூபாய் வாங்கிக்கொண்டு முத்திரை போட்டுக் கொண்டு வந்தான். இம்முறையும் எப்படிச் சமாளிக்கப் போகிறதோ? பிரதிகள் டைப் அடிக்கப் பத்து ரூபாய். டைப் அடித்த பின் அரசாங்க அதிகாரி கையெழுத்துப் போட்டுத் தரப் பத்து ரூபாய். இப்படி எவ்வளவு முறை?

காலை உணவு முடிந்த பிறகு பாலுவே பள்ளிக்கூடம் போய் வந்தான். அங்கே எல்லாப் பையன்களுக்கும் மதிப்பெண் பட்டியல் கள் வந்து சேர்ந்து விட்டாலும் இன்னும் டிரான்ஸ்பர் சர்டிபிகேட் முதலியவை தயாராகவில்லை. எல்லாம் பிற்பகல் மூன்று மணிக்குத் தயாராகி விடும். அதன் பிறகு விநியோகம்.

பாலு அவனுடைய அப்பாவின் காரியாலயம் போனான். அங்கே வரவேற்பறை மிகவும் தடபுடலாக இருக்கும். காத்திருப் போர் மனதை இலேசுப்படுத்தவென அங்கு வைக்கப்பட்டிருந்த தொழில் முறைப் பத்திரிகைகள் வழவழப்பான தடித்த தாளில் மிக அழகாக அச்சிடப்பட்டவை. அவை போடப்பட்டிருந்த மேசையே சில ஆயிரம் ரூபாய் மதிப்புடையது. அதே போல் சோபாக்கள்.

பாலுவுடைய அப்பா மாதத்தில் இருபது நாள் சுற்றுப்பயணம் செய்பவராதலால் அவருக்கென்று தனி அறை கிடையாது. ஆனால் பிற அதிகாரிகளுக்குத் தனிஅறை. ஏர்கண்டிஷனர், டெலிபோன் எல்லாம் உண்டு. பாதிப் பேரிடம் கார் உண்டு. பலரிடம் ஸ்கூட்டர் உண்டு. பாலுவின் அப்பாவுக்குத்தான் அதெல்லாம் சாத்தியப் படவில்லை.

இவ்வளவு செல்வக் கொழிப்புக்கு நடுவில் அவர் வேலை செய்தாலும் அவர் மகனின் சர்டிபிகேட்டுகள் நாணயமாகப் பிரதி எடுக்கப்பட்டவை என்று அத்தாட்சி தர அவர்கள் யாருக்கும் அதிகாரம், அந்தஸ்து கிடையாது. அதற்கு அழுக்குப் படிந்த சுவர், மேசை நாற்காலிகளும், பழுப்புக் காகிதத்தில் எல்லா உத்தரவு களையும் தயாரிக்கும் அரசு அலுவலகத்தில் தான் உண்டு. மூன்று மணிக்கு சர்டிபிகேட்டுகள் கிடைத்து எப்போது டைப் அடித்து எப்போது கையெழுத்து வாங்குவது? இன்றும் எந்த இடத்திலும் விண்ணப்பத்தைச் சேர்ப்பிக்க முடியாது.

இதைச் சொல்லித்தான் அப்பா வருத்தப்பட்டுக் கொண்டார். அவருடைய அடுத்தச் சுற்றுப் பயணம் அடுத்த நாளே துவங்கி விடும்.

"அப்பா, நீங்களே எங்க ஸ்கூலுக்கு வந்தா சீக்கிரம் வாங்கி—டலாம்?" என்று பாலு கேட்டான்.

"மூணு மணிக்கு முன்னாலியே கொடுத்துடுவாங்களா?"

"நீங்க வந்தா முடியும்ப்பா. நாங்களாப் பையன்களாப் போனா காக்க வைச்சுத்தான் தராங்க."

பாலுவுடன் அப்பா வந்தார். ஆனால் அவரைப் போல இன்னும் பல அப்பாக்களும் அங்கு வந்து காத்திருந்தார்கள். தலைமையாசிரியர் சிலர் மீது எரிந்து விழுந்தார். சிலருக்கு இதமாகப் பதில் பேசினார். அங்கு கூட அப்பாவின் தொழிலுக் கும் அவர் வேலை செய்யும் ஸ்தாபனத்துக்கும் பெரிய மதிப்பு கிடையாது. அப்பா போலீஸிலோ, கல்வி இலாக்காவிலோ இருந்தால் ஒருவேளை வந்த வேலை எளிதாக முடியலாம்.

பாலு அப்பாவோடு காத்திருந்தான். அவனுக்கு இப்போது இன்னொரு விஷயமும் வயிற்றைக் கலக்க ஆரம்பித்தது. மதிப்பெண் பட்டியல், சர்டிபிகேட் முதலியன கிடைத்துவிடும் — ஆனால் அவனுடைய மதிப்பெண்கள் எப்படி இருக்கப் போகின்றன? ஐந்நூறுக்கு நானூறாவது கிடைக்குமா? இந்தக் காலத்தில் எல்லாருமே நூற்றுக்குத் தொண்ணூறு தொண்

ணூற்றைந்து என்று வாங்கி விடுகிறார்கள். அவனுக்கு ஐம்பது அறுபதுக்கு மேல் கிடைத்ததில்லை. இதில் எப்படி இருக்கப் போகிறதோ?

நேரம் ஆக ஆகப் பாலுவுக்குச் சுரமே வந்து விடும் போலிருந்தது. பள்ளிக் காரியாலயம் மிகவும் சோர்வடைந்து இயங்கிக் கொண்டிருந்தது. வாசல் கதவை இழுத்து மூடிப் பியூன் சங்கரன் காவல் காத்தான். சில பையன்கள் அப்போதே அவனிடம் சில்லறை கொடுத்து விட்டார்கள். அவர்கள் அந்தக் கதவுக்கருகில் குழப்பமாக நின்றார்கள். ஆனால் அவர்களுக்குப் பின்னால் மட்டும் இரு வரிசைகள் ஒழுங்காக அமைய ஆரம்பித்தன.

பாலு ஒரு வரிசையில் நின்று கொண்டான். அவனுடைய அப்பா குழப்பக் கூட்டத்தில் ஒருவராக இருந்தார். அங்கு நரை மயிரும் இளமுடியும் கலந்து கலந்து காணப்பட்டன.

திடீரென்று ஒரு சன்னல் திறக்கப்பட்டது. "எல்லாரும் இங்கே வாங்க" என்று ஒரு கட்டளை உள்ளேயிருந்து வந்தது. குழப்பம் இப்போது ஜன்னலுக்கு மாறியது.

ஒவ்வொரு பையனும் இரு இடங்களில் கையெழுத்துப் போட வேண்டியிருந்தது. இதில் குழப்பம் இன்னும் அதிகமாயிற்று. அநேகப் பையன்கள் பேனா கொண்டு வந்திருக்கவில்லை. ஜன்னல் கம்பிகளுக்கிடையே கையை நுழைத்துக் கையெழுத்துப் போடுவது அவ்வளவு எளிதாக இல்லை.

ஒவ்வொரு பையனாக மதிப்பெண் பட்டியல் வாங்கி வரவும் பிற பையன்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அரை மணிக்குள் அந்த ஸ்கூல் பையன்கள் பரீட்சையில் வாங்கிய மதிப் பெண்களின் ஒரு பொதுமையான நிலை தெரிய வந்தது. அநே—கமாக எல்லாருமே சுமாராகத்தான் எண்கள் வாங்கியிருந்தார்கள். கணக்கில் அறுபது எழுபதுக்கு மேல் யாரும் தாண்டவில்லை.

"ஏன்டா, உனக்கும் இப்படித்தான் இருக்குமா?" என்று அப்பா கேட்டார்.

"எங்களுக்கு ஆறு மாசத்துக்குக் கணக்கு டீச்சரே கிடையா துப்பா," என்று பாலு சொன்னான்.

"ஆறு மாசமா? அப்படின்னா பாடமே நடக்கலையா?"

அங்கே பக்கத்தில் இருந்த இரு பையன்கள் உடனே சொன்னார்கள். "ஆமா, சார். டீச்சரே கிடையாது."

"நீங்க கம்ப்ளெயிண்ட் பண்ணலியா?"

"பண்ணினோம், எல்லாம் வருவார் போன்னு ஹெட் மாஸ்டர் விரட்டிடுவார். அப்புறம் யாருமே வரலை."

"எங்கிட்டே ஏண்டா சொல்லலே, பாலு?"

"சொன்னேன்ம்ப்பா, ஒருநாள் ஸ்கூலுக்கு வந்து கேக்க றேன்னு சொன்னீங்க. அப்புறம் ஊருக்குப் போயிட்டீங்க."

தன் அப்பாவைப் போல் வேறு பல அப்பாக்களும் பள்ளிக்கு வந்து ஹெட்மாஸ்டரிடம் புகார் செய்ய நினைத்திருப்பார்கள். ஆனால் ஒருவரும் செய்யவில்லை. அல்லது யாராவது அப்படிச் செய்திருந்தால் அது அதிகம் செல்வாக்கு இல்லாத ஒருவராக இருக்க வேண்டும். இப்போது இதைப் பற்றி நினைத்து என்ன பயன்? கணக்கு வாத்தியாரே இல்லாமல் எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை எழுதி அதை பாஸ் செய்துமாயிற்று. ஆனால் வெறுமனே பாஸ் செய்தால் மட்டும் போதுமா? மேற்கொண்டு எந்த மேல் நிலைப்பள்ளியில் இடம் தருவார்கள்?

கதிர்வேலன், சத்யமூர்த்தி, ரவிசங்கர், ஜனார்த்தனன் இவர் களுடையதெல்லாம் வந்துவிட்டது. ஒவ்வொருவர் மதிப்பெண் பட்டியலையும் அப்பா ஒருமுறை பார்த்து விட்டுத் தருகிறார். பாலுவின் நண்பர்கள் எல்லாமே அப்பாவைச் சுற்றித்தான் நிற்கிறார்கள். குறைந்த மதிப்பெண் பெற்றவர்கள், நிறைய வாங்கியவர்கள் எல்லாருமே இப்போது இறுக்கம் தணிந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். பயம், சந்தேகம் எல்லாம் மதிப்பெண் தெரிவதற்கு முன்புதான். அது தெரிந்த பிறகு நிலைமை எப்படி இருந்தாலும் மனம் சமாதானப்படுத்திக்கொண்டு விடுகிறது.

"எஸ். பாலகிருஷ்ணன்!"

"எஸ். சார்!"

பாலு சன்னல் கூட்டத்தில் அவனுடைய இயல்புக்கு மீறிய முரட்டுத்தனத்துடன் பிற பையன்களை அகற்றித் தள்ளிக் கொண்டு முன்னேறினான். நடுங்கும் கைகளுடன் கையெழுத்திட்டு விட்டு அவனுடைய மதிப்பெண் பட்டியல் முதலானவற்றை வாங்கிக் கொண்டு கூட்டத்திலிருந்து வெளியேறினான். கம்ப்யூட்டர் உதவி கொண்டு மதிப்பெண் தாள்கள் தயாரித்திருந்தார்கள். அவனுக்கு முதல் பார்வையில் எல்லாமே ஒரு தெளிவற்ற குவியலாக இருந்தது. அவன் கூட்டத்திலிருந்து வெளியே வந்ததும் அப்பா ஆவலுடன்

அவனுடைய தாள்களை வாங்கிக் கொண்டார். அவருடன் அங்கு இருந்த பத்துப் பதினைந்து பையன்களும் ஆர்வத்துடன் பாலுவின் பட்டியலைப் பார்த்தார்கள்.

குறைவு. மிகவும் குறைவு. தமிழில் அறுபத்து மூன்று. ஆங்கிலத்தில் நாற்பது நான்கு. கணக்கில் நாற்பத்தெட்டு. சரித்திரம் பூகோளத்தில் ஐம்பது. விஞ்ஞானத்தில் ஐம்பத்திரண்டு. மொத்தம் இருநூற்றி ஐம்பத்தேழு. ஐந்நூறுக்கு இருநூற்று ஐம்பத்தேழு. இதை வைத்துக் கொண்டு எங்காவது நடுக்காட்டில் ஒப்புக்கு நடத்தப்படும் பள்ளியில்தான் இடம் கிடைக்கும். இப்படிக் குறைந்த மார்க் வாங்கிப் பாஸ் செய்வதற்குப் பதிலாக பெயில் ஆகியிருந்தால் மறு பரீட்சையிலாவது நிறைய மார்க் வாங்க வாய்ப்பு உண்டு. இப்போது அதெல்லாம் கிடையாது. ஒன்றும் கிடையாது.

பாலுவுக்கு அவனுடைய எதிர்காலம் சிறுத்துக் கருத்துப் போனதைவிட அப்பாவின் முகத்தில் தோன்றிய வேதனைதான் மிகவும் அவதிப்படுத்தியது. அங்கே பக்கத்தில் நின்றிருந்த பையன் களிடம் அவர், "உங்களுக்கு எவ்வளவு வந்தது?" என்று கேட்டுக் கொண்டிருந்தார். "உங்களுக்கு இவ்வளவு குறைச்சலா வந்ததா? ஏண்டா உனக்குக் கணக்கிலே எவ்வளவு? உனக்கு இங்கிலீஷ்லே எவ்வளவு?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

அவ்வளவு பையன்கள் எதிரில் பாலுவைப் பார்த்துச் சொன்னார்; "இந்தப் பையன்களைப் பார். பாவம், ஒரு குப்பத் திலே இருக்கிற பையன். அவன் வீட்டிலே படிச்சவங்கன்னு ஒருத்தர்கூட இருக்க மாட்டா. அவன் உன்னைவிட எழுபது மார்க்கூட வாங்கியிருக்கான். கணக்கிலே எழுபது, எல்லாத்திலேயுமே உன்னை விடக்கூட."

பாலு பதில் பேசாமல் நின்றான். அப்பா பெரும் துக்கத்தில் இருந்தார்.. பையன் குறைத்து மார்க் வாங்கிவிட்டான் என்பது மட்டும் துக்கத்துக்கும் காரணமல்ல.

அந்த நிலையில் பையனுக்குக் கணிசமாக உதவ முடியாததன் இயலாமையே அவரை இன்னும் துக்கத்துக்கு உள்ளாக்கியது: 'நிஜமான பிரதி' கையெழுத்து வாங்கித் தருவது கூட அவருக்கு இயலாததாகப் போகலாம்.

பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்குப் பதினைந்து நிமிஷம் நடக்க வேண்டும். தெருவில் நிறைய எருமைகள் வந்து விட்டன. பாலுவும் அவனுடைய அப்பாவும் எருமைகள் நடு நடுவே புகுந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். அப்பா மறுபடியும் மறுபடியும்,

"உனக்கு எப்படி இவ்வளவு குறைஞ்ச மார்க்? அந்தக் குப்பத்துப் பையன், அந்தச் செவத்த பையன், எல்லாருமே உன்னைவிட நிறைய வாங்கியிருக்காங்க, உனக்கு மட்டும் ஏன் இப்படி?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

தகப்பனார் தம்மை வருத்திக் கொள்வதை அதிகப்படுத்த வேண்டாம் என்றே பாலு பார்த்தான். ஆனால் அவனுக்கும் தாங்க முடியவில்லை. அவன் சொன்னான்: "அப்பா, நான் குறைச்சு மார்க் வாங்கினதுக்கும் அவங்க நிறைய வாங்கினதுக்கும் ஒரு காரணம்ப்பா. அவுங்க எல்லாரும் பிட் அடிச்சாங்க, நான் எனக்குத் தெரிஞ்சதை எழுதினேன்."

அதற்கு அப்பா சொன்ன பதில் பாலுவைத் தூக்கி வாரிப் போடச் செய்தது.

அப்பா கேட்டார். "ஏன், நீயும் அடிக்கிறதுதானே?"

1982